3rd March 1958]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுதும் இந்த அதிகாரத்தை விவசாய டிபார்ட்மெண்ட்தான் பிரயோகித்து வருகிறது.

SRI M. JAGANNATHAN : தலைவர் அவர்களே, இந்த பூச்சியினால் ஏற்படக்கூடிய தொந்தரவை தடுப்பதற்கு வேண்டிய பரிசீலனை தொடர்ந்து நடைபெற்று வருவதாக தெரிவித்தார்கள். இந்த பரிசீலனை இன்னும் எவ்வளவு காலத்திற்கு நடைபெறும் ? இதனால் எவ்வளவு காலத்திற்கு நன்மை ஏற்படும் என்று காலவரையறுத்து அமைச்சர் அவர்கள் கூறுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த பரிசீலனையில் ஏற்படக்கூடிய சாதனைகளை விவசாயிகள் அனுபவித்துத்தான் வருகிறார்கள் இதனால் அடியோடு பூச்சியை ஒழித்துவிடலாம் என்று சொல்வதற்கில்லை. இந்த நாட்டைவிட விவசாயத்தில் முன்னணியில் நிற்கின்ற ஜப்பான் நாட்டில் கூட இந்த தொந்தரவு இருந்து கொண்டிருக்கிறது.

*Hobart Training School*

* 169 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to re-open the Urdu Section in the Hobart Training School in the City?

THE HON. SRI C. SUBRAMANIAM : No, Sir.

*Barriers alongside Palar in Vaniyambadi*

* 170 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Public Works be pleased to state whether the Government have taken any steps to construct barriers alongside Palar in Vaniyambadi to prevent damages due to floods?

THE HON. SRI P. KAKKAN : During the floods of October 1956 the right margin of the Palar river at Vaniyambadi was eroded. Emergent repair works for Rs. 9,300 were carried out immediately. Temporary groynes with brushwood edging in bamboos were provided. This has arrested further erosion and also induced silting up of the margin. Rough stone groynes have been proposed to be provided as a permanent measure to prevent floods.

*Road dam across Turinjalar*

* 171 Q.—SRI P. U. SHANMUGAM : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(a) whether the bridge constructed near Polakonam, Tiruvannamalai taluk, over Olaiyar river has been washed away;

(b) the reasons therefor;

(c) when it was constructed and how much was spent on its construction; and

(d) whether there is any proposal to reconstruct it?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a), (b) & (c) The road dam referred to, which is over Turinjalar, was constructed in June 1956 at a cost of Rs. 4,420. Some vents of the road dam were damaged by the unprecedented floods during the monsoon in 1956.

[3rd March 1958

(*d*) The local panchayat proposes to repair the road dam at an estimated cost of Rs. 1,500.

**SRI P. U. SHANMUGAM :** இந்த பாலம் எப்போது கட்டப்படும் என்பதை அமைச்சர் அவர்கள் சொல்லுவார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** அந்த கிராம பஞ்சாயத்து இதை 1,500 ரூபாய் செலவில் கட்டுவதற்கு தீர்மானித்திருக்கிறது.

**SRI P. U. SHANMUGAM :** அந்த பஞ்சாயத்துக்கு பண நிலே சரியாக இல்லே என்பதை மந்திரி அவர்கள் அறிவார்களா ? ஆகவே இதை ஸ்தல அபிவிருத்தி திட்டத்தின் கீழ் அந்த பாலத்தை கட்ட முன்வருவார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** என்னிடம் இப்போது இருக்கின்ற தகவலின்படி பஞ்சாயத்து இதை கட்டுவதற்கு ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். டிவிஷனல் இன்ஜினியர் இதை 1,500 ரூபாய்க்கு எஸ்டிமேட் போட்டு செலவு செய்து இதை முடித்துவிடலாம் என்று சொல்லி இருக்கிறார்கள். அதுதான் இப்போதைய நிலேமை.

*Agricultural Planning and Technique*

* 172 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the project that will be taken up by the Government in pursuance of the recommendations made by the Indian Delegation to China on Agricultural Planning and Techniques; and

(*b*) the steps taken to execute them?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) A statement[a] is placed on the table of the House.

**SRI P. G. MANICKAM :** சபாநாயகர் அவர்களே, ஜப்பானிய விவசாய முறையைப் பற்றியும், மேல் நாடுகளிலுள்ள விவசாய முறையைப் பற்றியும் இங்குள்ள பொது மக்களுக்கு எடுத்துரைப்பதற்கு, அதற்கான பிரசாரத்திற்கு 1958–59-ல் 115 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்த பிரசாரம் பொது மக்களுக்கு எவ்வாறு செய்யப்படும் ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** விவசாயிகளிடம் பல முறைகளிலும் பிரசாரம் செய்யப்பட்டு வருகிறது. துண்டுப் பிரசுரங்கள் மூலமாக எந்தெந்த வகையில் ஜப்பானிய முறையை ஏற்றுக்கொள்ளலாம் என்றும், என்னென்ன புது முறைகளே அனுஷ்டிக்கலாம் என்பதைப் பற்றியும் எடுத்துரைத்து விளக்கப்பட்டு வருகிறது.

**SRI N. K. PALANISAMI :** அவர்கள் செய்த முக்கியமான சிபாரிசு கூட்டுறவு விவசாயம் என்பது. சீனவில் நிலச் சீர்திருத்தம் செய்து அதன் மூலம் நிலத்தை விவசாயிகளுக்கு விநியோகித்து கூட்டுறவு பண்ணேகள் அமைத்து அதன் மூலம் வெற்றிகரமாக விவசாயத்தை செய்து வருகிறார்கள். இவைகளே இந்த அரசாங்கம் எந்த விதத்தில் அமுல் நடத்தப் போகிறது என்பதை கேட்க விரும்புகிறேன்.

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** சீனவை அப்படியே காப்பியடிக்கவேண்டும் என்பது சிபாரிசு அல்ல, அந்த உத்தேசமும் இந்த அரசாங்கத்திற்கு கிடையாது. கூட்டுறவு பண்ணேகளே அமைக்க வேண்டுமென்பதில் அரசாங்கம் கவனம் செலுத்தி வருகிறது.

**SRI K. R. NALLASIVAM :** தற்போது நம் நாட்டில் உபயோகப்படுத்தப் பட்டுவருகிற விவசாய கருவிகளுக்குப் பதிலாக ஜப்பான் நாட்டில் உபயோகப்படுத்தப்படுகிற விவசாய கருவிகளே நம் நாட்டில் உபயோகப்படுத்த வேண்டும் என்று ஏதாவது சிபாரிசு செய்யப்பட்டிருக்கிறதா ?

---

[a] Printed as Appendix I on pages 152–153 infra.